அவிரோதிநாதர்

இயற்றியருளிய

# திருவெம்பாவை



உரையாசிரியர் :

கு. பாலசுந்தர முதலியார் அவர்கள்



வெளியீடு :

ஜினகாஞ்சி ஜைனத் தமிழ் இலக்கிய மன்றம்,

38, இராசாம்பேட்டைத் தெரு,

காஞ்சீபுரம்.

 1963 [விலை 37 பது காசு

# பதிப்புரை

திருவெம்பாவை என்னும் இவ் அரிய நூல், நாற்பது ஆண்டு களுக்குப் பின்னர் இரண்டாம் பதிப்பாக் வெளி வருகிறது. இந் நூலை வெளியிட விழைந்த யான் உரையுடன் வெளியிடின் பலருக்கும் பயன் தரும் என நினைத்து எனது அன்புக்கும் நன் மதிப்புக்கும் உரிய பெரியார், உயர் திரு. புலவர் கு. பாலசுந்தர முதலியார் அவர்களை அணுகி இந் நூலுக்கு உரை எழுதி உதவுங்கள் எனக்கேட்டுக் கொண்டேன். அப்பெரியாரும் எனது வேண்டு கோளை ஏற்று உரை எழுதித்தர ஒப்புக்கொண் டார்கள். பாவை நூலுக்கு உரை எழுதுவ தென்றால் அதற்குரிய இலக்கண அறிவும் அனுபவமும், அறிவாற்றலும் தேவை. நம்முடைய புலவர் அவர்களைத் தமிழ் உலகம் நன்கறி யும். கம்பராமாயணம், சீவக சிந்தாமணி போன்ற காவியங் களிலும் திருக்குறள், நாலடியார் ஆகிய பல நீதி நூல்களிலும் தொல்காப்பியம், நன்னூல் போன்ற இலக்கண நூல்களிலும் தலை சிறந்த புலமை வாய்ந்தவர். இவர் வைணவ சமயத்தவ ராகையால் பல வைணவ நூல்களை ஆராய்ந்தும் உரை எழுதி யும் புகழ் பெற்றவர்கள். வைணவ சமய வடமொழி நூலாகிய கணேச பஞ்சரத்தினம் என்னும் நூலைத் தமிழில் பெயர்த்துக் கவிகளாகவே இயற்றியுள்ளார். அண்மையில் ஸ்ரீ வெங்க டேச சுப்ரபாதம் என்னும் வடமொழி நூலைத் தமிழ்க் கவி களாகப் பாடி அளித்துள்ளனர். அதன் அருமையை எண்ணி அறிஞர் பெருமக்கள் அந் நூலுக்கு வெளியீட்டு விழா நடத் திப் புலவர் அவர்களைப் பாராட்டி யுள்ளார்கள். அது மட்டு மல்ல; மன்னவர் நிதியும் மங்கையர் மாண்பும் என்னும் அவர்தம் நூலைச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் B.A. மாணவர் களுக்குப் பாட புத்தகமாகவும் தொடர்ந்து சில ஆண்டுகள் வைத்துள்ளதை மாணவர் உலகம் நன்கு அறியும்.

இத்தகு புலமை மிக்க பெரியார் அவர்கள் எழுதிய இவ் வுரையை அறிஞர் உலகம் வரவேற்றுப் போற்றும் என்பதில் ஐய மில்லை. இந் நூலுக்கு உரை எழுதி உதவியதற்காக எனது சார்பாகவும் தமிழக ஜைனப் பெருமக்கள் சார்பாகவும் அப் பெரியாருக்கு நன்றி கலந்த வணக்கத்தைச் செலுத்துகின்றேன்.

இந்நூலை வெளியிட யான் எடுத்துக் கொண்ட முயற்சியிலும் எதிர்ப்பாராத வெற்றி கிடைத்தது. காஞ்சிபுரம் ஜைனத் தமிழ் இலக்கிய மன்றத்தினர் சில ஆண்டுகட்கு முன்னர் சீவக சிந்தாமணி சொற்பொழிவு நினைவு மலர் என்னும் அரிய மலரை வெளியிட்டதைப் பலரும் அறிவர். அம் மலர்களின் பிரதிகளில் விற்றவை போக, 345 பிரதிகள் மேற்படி மன்றச் செயலாளர் உயர்திரு. ச. கி. சுயம்பு நயினார் அவர்களிடம் இருந்தன. யான் திருவெம்பாவையை அச்சிட முனைந்த போது விப்பேடு உயர்திரு. ச. தேவபால நயினார் அவர்கள், ''தாங்கள் பொருளைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். யான் உதவி செய்கின்றேன்'' என்றார். அவர்தம் ஆர்வத்திற்கு நன்றி கூறி முடிப்பதற்குள் மன்றச் செயலாளரிடம் என்னை அழைத்துச் சென்று அவரிடம் இருந்த 345 சிந்தாமணி மலர்களையும் ரூபா 345 கொடுத்து வாங்கிக் கொண்டார். உடனே செயலாளரை நோக்கி இந்நிதியினின்றும் திருவெம்பாவையை வெளியிட்டு விடலாம் என்றார். திரு. சுயம்பு நயினார் அவர்களும் அதனை ஒப்புக்கொண்டார்கள். உடனே திரு. தேவபால நயினார் அவர்கள் ஜின காஞ்சி ஜைனத் தமிழ் இலக்கிய மன்றப் பெயரால் நூலை வெளி யிடுங்கள் என ஆர்வமோடு கூறினார். அப்பெரியாரின் மனப்பான்மையைக்கண்டு யான் வியப்புற்றேன். தம்முடைய பொருளைக்கொண்டு தம் பெயராலேயே நூலை வெளியிடுங்கள் எனக் கூறாது மன்றத்திலுள்ள மலர்களை விலைக்கு வாங்கி, மன்றத்திற்கு நிதியை உண்டாக்கி, அந்நிதியினின்றும் மன்றத்தின் பெயராலேயே இந்நூலை வெளியிடுங்கள் எனப்பணித்த அப்பெரியாரின் தியாகத்தையும் பரந்த நோக்கத்தையும் யார்தான் பாராட்டத் தயங்குவார்கள். செயற்கரிய செயலல்லவா? மன்றத்திற்கும் நிதிவேண்டும். மலரும் பலரிடையேயும் பரவ வேண்டும். இந் நூலும் வெளியாக வேண்டும் என்னும் அப்பெரியாரின் சிறந்த நோக்கத்தையும் தன்னலமற்ற வள்ளல் தன்மையையும் தமிழ் உலகம் என்றும் மறவாது.

இப்பெற்றி வாய்ந்த பேருள்ளம் இவருக்கு உதித்தது இவர்கள் முன்னோர்கள் வழி வழி வரும் பண்பே யாகும்.

கடந்த பத்தொன்பதாம் நூற்றுண்டில், அதாவது 1869ஆம் ஆண்டில் ஜைன சமயத்தவர்களில் முதன் முதலில் ஏட்டுப் பிரதியை அச்சுவாகன மேற்றி அலங்கரித்து உலகறியச் செய்தவர், நரியமுத்தூர் உயர் திரு. பாகுபலி நயினூர் அவர்களே யாவர். அப்பெரியார் காஞ்சீபுரத்தில் போலிஸ் இன்ஸ்பெக்டராகப் பணியாற்றிப் புகழ் பெற்றவர். அவரே அக் காலத்தில் யசோதர காவியத்தை முதன் முதல் வெளியிட்டார். அப்பெரியாரின் வழி வழித் தோன்றலே நம்முடைய அன்புக்குரிய திரு. ச. தேவபால நயினூர் அவர்கள். ‘எழுமையும் ஏமாப்புடைத்து’ என்னும் தமிழ் மறை பொய்க்குமா? நம்முடைய திரு. ச. தேவபால நயினூர் அவர்களும் அப்பரம்பரைப் பணியை மேற்கொண்டார். இப்பெருந்தகையை எவ்வளவு பாராட்டினுலும் தகும். இவர்தம் சமயப் பற்றும் சமய நூல்களில் உள்ள ஆர்வமும் அளவிடற் கரிது. சமய சேவை என்றுல் இளைஞர் போன்ற உணர்ச்சியுடன் வீறிட்டெழுவார். எங்கெங்கே சமய சொற்பொழிவு, இலக்கிய சொற்பொழிவு, சமய விழாக்கள் நடக்கின்றனவோ அங்கங்கே தவருமல் இவரைப் பார்க்கலாம். இத்தகு சமயப் பற்றும் சமய வழி நிற்கும் பண்பும் பெற்றிருப்பதனுலேயே இவரைத் திருப்பருதிக் குன்றத்து ஜினுலயத்திற்கு அறக் காப்பாளராக நியமித்துச் சிறப்புச் செய்துள்ளார்கள்.

மேலும் இப்பெரியாரின் அருஞ் செயலைப் பாராட்டிக் காஞ்சிபுரம் ஜைனப் பெருமக்கள் அன்றே அம் மன்றத்தை ஜின காஞ்சி ஜைனத் தமிழ் இலக்கிய மன்றம் எனப் பெயரிட்டு அதற்கு உயர் திரு. ச. தேவபால நயினூர் அவர்களைத் தலைவராக ஒரு மனதாகத் தேர்ந்தெடுத்துக் கௌரவித்து வாழ்த்திப் பாராட்டினுர்கள் என்ற மகிழ்ச்சிக்குரிய செய்தியை யான் இங்கு அறிவித்துக்கொள்ளுகின்றேன். இப்பெரியாருக்கும் திரு ச. சுயம்பு நயினூர் அவர்களுக்கும் இந்நூல் வெளியாகப் பல துறைகளிலும் உதவி புரிந்த பலருக்கும் எனது நன்றி கலந்த வணக்கம் என்றும் உரித்தாகுக.

சென்னை
15—1—63

இங்ஙனம்
T. S. ஸ்ரீபால்

# அணிந்துரை

[மயிலை. சீனி வேங்கடசாமி அவர்கள்]

கார்த்திகை மாதத்தில் மழை பெய்து நிலம் குளிர்ந்த பிறகு, தை மாதத்தில் பனிபெய்யும். பனி பெய்கிற தை மாதத்திலே விடியற்காலையில் படுக்கையைவிட்டு எழுந்திருப்பது துன்பமாக இருக்கும். குளிரைப் பொருட்படுத்தாமல் விடியற்காலையில் எழுந்து, காலைக் கடனைமுடித்துக் கடவுளைத் தொழுவது தமிழ்நாட்டு மரபு. அதிலும் முக்கியமாக இளம் பெண்கள்-வயது வந்த மணமாகாத கன்னிப் பெண்கள், விடியற்காலையில் எழுந்து நீராடித் தை நோன்பு நோற்பது பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டு வழக்கம். மணமாகாத கன்னிப் பெண்கள் மார்கழி மாதத்தில் நோற்று வந்த நோன்புக்குப் பாவை நோன்பு என்பது பெயர்.

தை மாதம் முழுவதும் கிராமத்துக் கன்னிப் பெண்கள் விடியற்காலையில் விழித்தெழுந்து ஒன்று கூடுவார்கள். வராத பெண்களின் வீட்டுக்குப் போய் அப்பெண்களை எழுப்பி அழைத்துக்கொண்டு ஊர்க்குளத்துக்கு அல்லது ஏரிக்குப்போய், சில்லென்றிருக்கும் நீரிலே படிந்து நீராடுவார்கள். நீராடிய பிறகு பூக்களைப் பறித்துக்கொண்டு கோவிலுக்கு வந்து கடவுளை வழிபடுவார்கள். தை மாதம் பாவை நோன்பு காலத்தில் அப் பெண்கள் ஓரே வேளை உணவு கொள்வார்கள். இது கன்னிப் பெண்களுக்கு மட்டும் ஏற்பட்ட நோன்பாகும். சாதி பேதம், மத பேதம் இல்லாமல் இந் நோன்பு தமிழ்நாட்டுப் பெண்கள் கொண்டிருந்த ஒரு மரபாகும்.

இந்தப் பாவை நோன்பை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டது, திருவெம்பாவை அல்லது திருப்பாவை என்னும் செய்யுள் இலக்கியம். வைகறையில் எழுந்து குளத்தில் நீராடி, வழி

படு கடவுளை வணங்குவோம் வாருங்கள் என்று பாவை நோன்பு நோற்கும் பெண்கள் கூறுவது போலத் திருவெம்பாவைச் செய்யுள் அமைக்கப்பட்டுள்ளது. வைணவர், சைவர், ஜைனர் ஆகிய சமயத்தவருக்குத் தனித்தனியே திருப்பாவை நூல்கள் உள்ளன.

ஜைன சமயத்துக்குரிய இந்தத் திருவெம்பாவை அவிரோதியாழ்வார் என்னும் பெரியார் இயற்றியது என்ப. இந்நூலின் ஒரு செய்யுளிலே 'அவிரோதி' என்னுஞ்சொல் வந்துள்ளது. அச்சொல், நூலாசிரியரைக் குறிக்க வில்லையாயினும் குறிப்பாக அவிரோதியாழ்வாரைக் குறிக்கிறது என்று கருதப்படுகிறது. திருநூற்றந்தாதி என்னும் சிறந்த நூலைச் செய்தவர் அவிரோதியாழ்வார். திருநூற்றந்தாதியில், சிறப்பாக நேமிநாத தீர்த்தங்கரரை இவர் கூறுவது போலவே, இத் திருவெம்பாவையிலும் நேமிநாதரையே சிறப்பாகப் போற்றுகின்றார். இத்திருவெம்பாவை, மற்றத் திருப்பாவை, திருவெம்பாவைகளைப் போலவே சிறந்த இலக்கியமாக விளங்குகின்றது.

இந்நூல் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு அச்சிடப்பட்டது. இப்போது மீண்டும் அச்சிடப்பட்டு வெளிவருகிறது. இதற்குப் புலவர், கு. பாலசுந்தர முதலியார் அவர்கள் உரை எழுதி யுள்ளார்கள். செய்யுட் கருத்தை இவ்வுரை நன்கு விளக்குகின்றது. சிறந்த புலவராகிய இவர் வேறு சில சிறந்த நூல்களையும் எழுதியுள்ளார். ஜைனர்கள் இதைப் பக்தி நூலாகப் படிக்கலாம். ஜைனரல்லாதவர் இதனைத் தமிழ் இலக்கியமாகக் கற்கலாம். ஜைனர்கள் அளித்த தமிழ் இலக்கியங்களில் இதுவும் ஒன்று.

இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்திய காஞ்சி ஜைனத் தமிழ் இலக்கிய மன்றத்தாருக்கும் இதற்கு உரை எழுதிய புலவருக்கும் தமிழரின் நன்றி உரித்தாகும்.

சென்னை
15—1—63 } மயிலை. சீனி வேங்கடசாமி

# முன்னுரை

எழில் நலம் வாய்ந்து என்றும் இளமையோடு விளங்கும் நந்தம் தமிழன்னைக்கு ஆக்கம் தேடியவர் பலர். அவர் தமுள் ஜைன சமயத்தவர் முதன்மை வாய்ந்தவர் என்பது எவரும் மறுக்க முடியாத உண்மையாகும். ஜைனர்கள் நம் தமிழகத்தில் இலக்கணம், இலக்கியம், சமயம் முதலிய பல்வேறு துறைகளில் இயற்றிய நூல்கள் பலப்பலவாகும். அவையாவும் தமிழ் மக்கள் அனைவரும் போற்றிப் பயிலும் பான்மையவாய் விளங்கு கின்றன.

இத்திருவெம்பாவை ஜைன சமய நூலாகும். இது 1920ஆம் ஆண்டில் இராயபுரம் உயர்திரு வஜ்ஜிரபாகு நயினார் அவர் களின் பொருளுதவியால் முதன்முதல் தருமசீலன் அச்சகத்தில் வெளியிடப்பெற்றது. அதன் பின்னர் இந்நூல் யாண்டும் கிடைப்பதற்கு அருமையாயிற்று. 1960ஆம் ஆண்டில் ஜீவபந்து ஸ்ரீபால் அவர்கள் இந்நூலை நல்லறத் திங்கள் இதழில் வெளி யிட்டுதவினார்கள். அதனைக் கண்ணுற்ற யான் மகிழ்ச்சி மீக்கூர்ந்து, இத்தகு சிறந்த திருவெம்பாவை; நூல் வடிவில் வெளிவரின் அது தமிழன்பர்கள் பலர்க்கும் பெரிதும் பய னுடையதாகும் என்று எண்ணினேன்.

சில நாட்களுக்குப் பின்னர், ஒருநாள், நண்பர் ஜீவபந்து, ஸ்ரீபால் அவர்கள் என்னிடம் வந்து திருவெம்பாவைக்கு உரை யெழுதித் தரும்படி கேட்டுக்கொண்டு பழைய ஏட்டுப் பிரதி ஒன்றினை எனக்குக் கொடுத்தனர். ஸ்ரீபால் அவர்களைத் தமிழ் உலகு நன்கறியும். பன்னெடுங் காலமாகத் தெய்வத்தின் பெயரால் நடைபெற்றுவந்த உயிர்ப்பலிக்கு நமது காங்கிரஸ் சர்க்கார் வாயிலாகப் பலி விலக்குச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்தவர்கள். தமிழ்ப் பற்று மிகுதியுங் கொண்டவர். எங்கேனும் சிறந்த தமிழ்ச் சொற்பொழிவு நிகழுமாயினும் அங்கெல்லாம் அவரைக் காணலாம். இத்தகு பண்பாடுடைய வரின் வேண்டுகோளுக்கு இசைந்து இவ்வரிய திருவெம்பா வைக்கு யான் உரை யெழுத ஒருப்பட்டேன்.

இந்நூலாசிரியர் பெயர் அவிரோதிநாதர் என்பதாகும். இதனை இந்நூலின் பதினைந்தாம் செய்யுளின் ஏழாமடியில் 'இருளார்ந்த பூங்குழலீர் இசையார் அவிரோதி' என்று வருவ தால் அறியலாம். திருநூற்றந்தாதி இயற்றிய அவிரோதி நாதரே இந்நூலாசிரியர் என்பதில் யாதொரு சந்தேகமும்

இல்லை. எனினும் ஆசிரியர் வரலாற்றினை நன்கு அறிய போதிய குறிப்புகள் கிடைத்தில. கர்ண பரம்பரையாகச் சில செய்திகள் கிடைக்கின்றனவே யொழிய, அவை யாவும் உண்மையெனக் கொள்ளுதற்குப் போதிய சான்றுகள் இல்லை. திருநூற்றந்தாதியை முதன் முதல் பதிப்பித்த பேராசிரியர் ரா. இராகவ ஐயங்கார் அவர்கள், ஆசிரியர் வரலாற்றைக் கூறுகையில், 'இவையெல்லாம் ஏதோ செவி வழிச் செய்திகள்' என்று கூறினரேயன்றி அவைகளுக்கு ஆதாரங்களைக் காட்டினா ரில்லை. ஆயினும் இவர்தம் பாடல்களை ஆராய்கின்றபோது இவர் ஒரு பழுத்த ஜைனர் என்பதும், இவருடைய பாடல்கள் அறிஞர்கள் அனைவரும் பாராட்டும் பண்பு வாய்ந்தவை என்ப தும் புலனாகின்றது.

இவ்வாசிரியர் இப் பாவை நூலின் இரண்டாவது பாவில் 'தீபங்குடியமர்ந்த செல்வன் சிறந்தபுகழ்' என்றும், பன்னி ரெண்டாம் பாவில், 'பூத்த பொழில்சூழ் கச்சிப்புங்கவனை' என்றும், பதினாறும் பாவில் 'உறவுத்தமர் வாழும் உச்சந்தர் வாழ்மலைமேல்' என்றும் வருவனவற்றால், இவருடைய காலம் தீபங்குடி, காஞ்சீபுரம், உச்சந்தமலை முதலிய இடங்களில் ஜினாலயங்கள் மிகவும் விளக்கப்பெற்ற காலமாகும் என்பது யூகிக்கலாம். சீன யாத்திரிகர், யுவாங்ஷாங் என்னும் பேருடை யொருவர் காஞ்சீபுரத்திற்கு விஜயம் செய்தபோது, இவ்வூரில் 85 ஜினாலயங்கள் இருந்ததாகக் குறிப்பிட்டுச் சென்றார். இந்த யாத்திரிகர் விஜயம் செய்த காலம் கி பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியாகும். ஆகவே, ஆசிரியரின் காலம் ஏறத்தாழ ஏழாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியாகவோ, எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியாகவோ இருக்கவேண்டும்.

பயின்றுவரும் சொல்லாலும் பொருளாலும் தொடையா லும், நடையாலும் இந்நூல் ஓதற்கினியதாய், விழுமிய பயத்த தாய் விளங்குகின்றது.

—உரை ஆசிரியர்

# திருவெம்பாவை

## கொச்சகக் கலிப்பா

மூவா முதல்வ னுலக முழுதுணர்ந்த
தேவாதி தேவன் திருநாமம் யாம்பாடப்
பாவாய்நீ கேட்டிலையோ பைங்கண் துயிலுதியோ
பூவாரு மென்கழல்கள் போற்றியபொங் கொலிபோய்த்
தேவாயிற் கேட்டலுமே தேர்ந்துநெஞ்சு சோர்ந்தயர்ந்து
பூவா ரமளிப் புலம்பப் புரண்டிங்கன்
ஓவா மனத்தி னுணர்விலா வோவியம்போல்
ஆவாயென் றேழி பரிசேலோ ரெம்பாவாய் (1)

(பொழிப்புரை) பாவை போன்ற பெண்ணே, திருக்கோயி வின் திரு முற்றத்தில் (பக்தர்கள்) இறைவனுடைய மலர் போன்ற மென்மை யாகிய பாதங்களைப் போற்றுதலால் உண் டாகியபேரொலி எங்குஞ்சென்று பரவ, அதனைச் செவியேற்ற வுடனே நாங்கள் தெளிந்து (எழுந்து வந்து) என்றும் அழியாத முதல்வனும், உலகம் முழுவதையும் உணர்ந்தவனும் தேவர் களுக் கெல்லாம் தலைவனுமாகிய அவ் விறைவனுடைய அழகிய பெயர்களைப் பாடவும், நீயதனைக் கேட்கவில்லையோ? உடலோடு உள்ளமும் சோர்ந்து, மலர்கள் நிறைந்த படுக்கையில் தனிமை யாக இவ்விதம் புரண்டுகொண்டு (நினைத்தல்) நீங்காத மனத் தின் உணர்ச்சி இல்லாத சித்திரப் பாவை போல் நாங்கள் பாடு தலைக் கேட்டலும் எழுத லின்றித் துயில்கின்றாயோ? எம் தோழியே, உனது தன்மை மிக்க வியப்பா யிருக்கின்றது.

(விசேட உரை) 'ஏலோ ரெம்பாவாய்' என்பது பாவை நூலில் ஒவ்வொரு பாட்டின் ஈற்றில் அடி நிறைக்க வரும் சொற்றொடரென் றறிக.

''மூவா முதலா வுலகம்ஒரு மூன்றும் ஏத்தத்
தாவாத இன்பம் தலையாயது தன்னின் எய்தி
ஓவாது நின்ற குணத்தொள்நிதிச் செல்வ னென்ப
தேவாதி தேவன் அவன்சேவடி சேர்து மன்றே''

என்னும் சீவகச் சிந்தாமணியின் கடவுள் வாழ்த்துச் செய்யுளின் பொருள், இம் முதற் பாட்டின் பொருளோடு ஒருபுடை ஒப்பு நோக்கற் குரியதாகும். முழு துணர்தல்—கேவல ஞானம் என்ப; இதனை யுடைய இறைவனைத் திருவள்ளுவர் 'வாலறிவன்' என்றார்.

உலகம் முழுதும் உணர்ந்த தேவாதி தேவன்தன் திருநாமங்களைப் பாடவும், பாவாய், நீ கேட்டிலையோ? சோர்ந்து பூவார் அமளியின்கண் இங்ஙன் புரண்டு ஓவா மனத்தின் உணர்விலா ஓவியம் போல், என் தோழி, நீ பைங்கண் துயிலுதியோ? நின் பரிசு ஆ! ஆ! என இயைத்து, 'இருந்தவா றென்னே' என்னும் சொற்றொடரை வருவித்து வினை முடிவு செய்க. 'போய்' என்பது போக என்னும் செய வெனெச்சத் திரிபு. முழுதும் என்பதன் முற்றும்மை தொக்கது, செய்யுள் விகாரம். ஆ! ஆ! என்பது வியப்புக் குறிப்பு இடைச் சொல்; இரக்கமுமாம். முழு துணர்வு—கேவல ஞானம்.

**கோபங் கடிந்தெண் குணத்தானுக் கன்பாகிப்**
**பாபங்கள் நீங்கப் பணிந்தே யிராப்பகலும்**
**சாபுத் துணைவிழியாய்! தாதவிழ் பூவணைமேல்**
**சோபங்கள் வைத்தனையோ சொல்லாய் துடியிடையாய்!**

லோபத் தடமிதுவோ வும்பரெல்லா மேத்தரிய
தூயமலர்ப் பொற்பாதந் துன்பமறத் தந்தருளும்
தீபங் குடியமர்ந்த செல்வன் சிறந்தபுகழ்
தாபந் தணிந்தோத வாரேலோ ரெம்பாவாய். (2)

(பொ. உ.) வில்லை யொத்த புருவத்தோடு கூடிய இரண்டு கண்களை யுடைய பெண்ணே, மலர்தலால் மகரந்தப் பொடிகளை அவிழ்க்கும் மலர்களைப் பரப்பி யுள்ள படுக்கையில் உன்னுடைய இரக்கங்களை வைத்தனையோ? இந்தப் பூம் படுக்கை கடும் பற்று வைத்தற் குரிய இடமோ? சொல்வாயாக; கோபத்தை விலக்கி எட்டுக் குணங்களையும் தனக்கு உடைமைப் பொருளாக ஆக்கிக் கொண்ட இறைவன்பால் இரவும் பகலும் அன்புடையவர்களாகிப் பணிந்து, தேவர்கள் எல்லோரும் துதித்தற்கு அரிய பரிசுத்தமான மலர் போன்ற அழகிய பாதங்களைப் பிறப்பு இறப்புக்களால் உண்டாகும் துன்பங்கள் நீங்கத் தந்தருளுகின்றவனாகிய தீபங்குடி யென்னும் திருப்பதியின்கண் எழுந்தருளி யுள்ள செல்வனாகிய நேமித் தீர்த்தங்கரரது சிறந்த புகழை மனத்தின் வெப்பம் தணிந்து பாடுதற்கு வருக.

(வி. உ.) சாபம் - வில். சோபங்கள் - இரக்கங்கள்; லோபம் - கடும்பற்றுள்ளம். படுக்கை இன்பத்தில் பெரிதும் ஈடுபட்டுக் கிடக்கும் ஒருத்தியைத் துயிலெழுப்புவது இந்தப் பாட்டு. இறைவனுடைய சிறந்த புகழைப் பாடுவதால் தாபங்கள் யாவும் நீங்கப் பெற்றுப் பேரின்பத்தை அடைதல் கூடும் என்பது இதற்குக் குறிப்புப் பொருளாகும்.

"கோளில் பொறியில் குணமிலவே யெண்குணத்தான்
தாளை வணங்காத் தலை"

எண் குணங்களாவன :— 1. கடையிலா அறிவு, 2. கடையிலா காட்சி, 3. கடையிலா வீரியம், 4. கடையிலா இன்பம், 5. நாம மின்மை, 6. கோத்திர மின்மை, 7. ஆயுளின்மை, 8. அழியாவியல்பு என்பனவாகும்.

இந்தக் குறளுக்குப் பரிமேலழகர், 'எண் குணங்களாவன:— தூய வுடம்பின னாதல், இயற்கை வுணர்வின னாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரரு ளுடைமை, முடிவி லாற்றலுடைமை, வரம்பி லின்ப முடைமை என இவை' என்பர்.

பள்ளி யுணர்ந்திலையோ பாவாய்நீ முன்வந்தென்
வள்ள லறவாழி நாதன் மலரடியை
உள்ள மருளி யுகந்தே கடைதிறவாய்
கள்ளவிழ் பூம்பிண்டிக் கடவுள் பழவடியீர்
தெள்ளியசீர்ப் புத்தடியோம் தேரும் திறமருளீர்
ஒள்ளியீர் அன்பாலுடையீர் அறியோமோ
வெள்ளியசீர் மனத்தார் வீர னடிபரவி
எள்ளிமையு மில்லா தெமக்கேலோ ரெம்பாவாய் (3)

(பொ. உ.) தேன் பெருகும் மலர்களை யுடைய அசோக மரத்தின் கீழ் வீற்றிருக்கும் இறைவனுடைய பழமை யாகிய அடியீர், (அவ்விறைவனிடத்தில் வைத்த) அன்பினால் நீர் எல்லா நலங்களையும் உடையீராய் இருக்கின்றீர்; உமது மேன்மையை அறிந்திலமோ? (அறிந்துள்ளோம்.) புதிய அடியவர்களாகிய எமக்குத் தூய்மையை யுடைய சிறந்த மனத்தினை யுடையவர் களுக்கே யுரிய அவ்வீரனுடைய அடிகளைக் குறை வின்றி (முறைப்படி) துதித்து உள்ளம் தெளியும் வகையை அருள்வீராக. பாவாய் (நீ இன்னும்) துயில் உணர்ந்திலையோ? என் வள்ள லாகிய அறவாழி நாதனுடைய மலர் போன்ற அடிகளை உள்ளத் தில் கொண்டு விரும்பி முன் வந்து கடை திறவாய்.

(வி. உ.) முன்னெழுந்து வந்தவர்களுள் முன் நின்று எழுப்புகின்றவள், துயில்கின்றவளை மரியாதையாக அழைக்கத் துயில்கின்றவள், எழுந்து வாராமையின், எழுப்புகின்றவள் கடிந்து 'பாவாய்' என ஒருமையாக விளித்துக் கூறலானாள் என்று கொள்க.

'எள்ளிமையும்' என்பதில் உள்ள உம்மை அசை. கள்ள விழ் பூம் பிண்டிக் கடவுள் தெள்ளிய சீர்ப் பழ அடியீர். ஒள்ளி யீர், அன்பாலுடையீர், அறியோமோ? புத்தடியோம் ஆன எமக்கு வெள்ளிய சீர் மனத்தார் வீரன் அடியை எள்ளிமையும் இல்லாது தேரும் திறம் அருளீர்; பாவாய் பள்ளி யுணர்ந் திலையோ? என் வள்ளலாகிய அறவாழி நாதன் மலரடியை உள்ளத்தின்கண் உகந்து மருவி, முன் வந்து கடை திறவாய் என இயைக்க. திருவள்ளுவர், திருக்குறளின் கடவுள் வாழ்த்தில் இறைவனை 'அறவாழி யந்தணன்' என்றதை இந் நூலாசிரியர் 'அறவாழி நாதன்' என்றார். 'கள்ளவிழ் பூம்பிண்டிக் கடவுள்' என்று அசோக மரத்தைக் கடவுளுக்கு அடை மொழியாக்கிக் கூறியது, 'பிடர் மண்டலவனைப் பிண்டி வெண்சாமரை' என்று திருநூற்றந்தாதியிலும், 'பிண்டியின் கொழு நிழல் பிறவி நோய் கெட விண்டலர் கனை கதிர் வீரன்'—என்று சீவகசிந்தாமணி (3022) யிலும் வருதல் காண்க.

நன்னித் திலநகையாய் நாணுத் துயிலுதியோ
மின்னேத் திடைமடவார் வீதிதொறும் வந்தாரோ
உன்னிக்கொண் டுள்ளவா றேதுவோ மவ்வளவும்
பன்னித் துயின்றவமே பல்காலும் போக்காதே
பொன்னுக் கொளியானைப் போத விழுப்பொருளைச்
சென்னிக் குறவணங்கிச் சேவித் தறம்பாடி
வன்னித் துளமுருகி வாழ்த்துகைக்கு நீயேவந்
தென்னைப் பரிசு பரிசேலோ ரெம்பாவாய் (4)

பெண்கள் கூட்டமாக வருதலைக் காண இருப்பாள், ஒருத்தியை எழுப்புவது இப்பாட்டு.

(பொ. உ.) நல்ல முத்துக்களைப் போன்ற பற்களை யுடையாய், (நாங்கள் வந்து நின்றும்) நாணாமல் துயில்கின்றாயோ? என்று முன் நின்று எழுப்புகின்றவள் கூறப் படுக்கையில் இருப்பவள், 'நான் துயிலவில்லை; மின்னலைப் போன்ற இடையை

யுடைய மடவார்கள் ஒவ்வொரு வீதியினின்றும் வந்தார்களோ? சொல், என்று வினவ, எழுப்புகின்றவள், 'ஒவ்வொரு வீதியினின்றும் பெண்கள் வந்தார்களோ என்பதனை நன்றாய்ப் பார்த்துத் தெளிந்து உள்ளபடி சொல்லுவோம்; அதுவரையும் நீ துயின்று பயன் உறுதற்குரிய உனது நெடுங் காலத்தைப் பயனின்றிப் போக விடாது, பொன்னின்கண் ஒளி போற் சிறந்தவனைக் கேவல ஞானம் என்னும் மேன்மையாகிய பொருளாய் இருப்பவனைச் சேவித்துச் சென்னியினால் பொருந்த வணங்கி, அக்கடவுள் அருளிய ஒழுக்க நெறியைப் பாடி, அவற்றைச் சிறப்பித்து (அக்கடவுளை) வாழ்த்துதற்கு எம்பால் நீயே வர உரிய தன்மை என்'?

(வி. உ.) பொன்னுக்கு என்பதில் நான்கன் உருபு ஏழன் உருபின் பொருளில் வந்தது உருபு மயக்கம். சென்னிக்கு என்பதில் மூன்றன் உருபில் நான்கன் உருபு மயங்கியது. 'வந்து' என்பது 'வர' என்னும் செயவென் எச்சத்திரிபு. 'கர்ணன்' என்பது 'கன்னன்' எனத் திரிந்து நின்றது போல 'வர்ணித்து' என்பது வன்னித்து எனத் திரிந்து நின்றது காண்க. ''சென்னிக்குற வணங்கி'' என்பது,

''வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்
கானிலம் தோயாக் கடவுளை யாம் நிலம்
சென்னியுற வணங்கிச் சேர்தும் எம்முள்ளத்து
முன்னியவை முடிக வென்று''

என நாலடி நானூற்றின் கண்ணும் வருதல் காண்க. ஜைனர்கள் அறத்தில் பெரிதும் ஈடுபாடுடையவராய் அறத்தையே சிறப்பாக வற்புறுத்துபவ ராகையால், 'அறம் பாடி என்றார்; திருக்கலம்பகத்திலும்—சமயவாதிகள் செவியினில் அறம் புகச் சாற்றுவன் காணீரே' என வருதல் காண்க. 'பொறிவாயி லைந் தவித்தான் பொய்தீரொழுக்க நெறி நின்றார் நீடு வாழ்வார்' எனத் திருக்குறளில் தேவரும் கூறியுள்ளமை காண்க.

வானவர்க ளேத்தரிய நான்மறையின் மெய்ப்பொருளை
தானறிவோ மென்னுந் தறுகண்மைத் தான்பேசில்
தேனூறு செவ்வாய்த் திருவே கடையறிவாய்
வானே நிலனே வளியே யெரிபுனலே
தானே யுணரும் தனையளித்தாட் கொண்டருளும்
ஆனந்த னாகும் அருகா வருகவென்
றானே யுருக வுளமுருக வோதியபின்
ஏரார் பதம்பெற் றுயிரேலோ ரெம்பாவாய் (5)

(பொ. உ.) வானவர்களால் (இத்தன்மையன் என்று கூறித்) துதித்தற்கு அருமையான நான்கு வேதங்களின் உண்மைப் பொருளாய் இருப்பவனை நாமறிவோம் என்னும் அஞ்சுதலில்லாத சொற்களை நீதானே பேசின், தேன் சுரக்கும் சிவந்த வாயினை யுடைய திருமகள் போலும் அழகை யுடைய மாதே, முடிவாக நாம் செய்தற் குரியதை நீ யறிவாயாக; வானும் நிலனும் காற்றும் நெருப்பும் புனலுமாகிய ஐந்து பூதங்களையும் தானே யுணரும் அவன்தன்னை, 'உன் வடிவத்தை எங்களுக்குக் கொடுத்து எங்களை யாட்கொண்டு அருளும் ஆனந்த வடிவனாகிய அருகதேவனே, எங்கள்பால் வருக' என்று உடல் உருகவும், மன முருகவும் ஓதிய பின் உயிரானது அழகு பொருந்திய பதத்தைப் பெற்று (இன்ப முறும்.)

(வி. உ.) இந்தப் பாடல் "சுவை யொளி யூறோசை நாற்ற மென்றைந்தின் வகை தெரிவான் கட்டே யுலகு" என்னும் திருக்குறளைப் பொருளால் தழுவியுள்ளது, போற்றிப் புந்தியுள் பொருத்துதற்குரியதாம். கடவுள் பஞ்ச பூதங்களாக உள்ளார் என்பார் கூற்று ஜைனர்களுக்கு உடன்பாடன்மையின், இவ்வாசிரியர் 'வானே நிலனே வளியே யெரி புனலே தானே உணரும்' என்றார். இதனைத் தழுவிய கொள்கையை,

" அம்மானை முடிவிலா ஞானந் தன்னா
லளவிலாப் பொருள் முழுதும் பார்த்துநின்ற

பெம்மானை யுலகளவு நிறைந்த சோதிப்
பெருமானை யறியாதே பெருமால் கொண்டிங்
கிம்மான நிலனாகித் தீயாய்க்காலா
யிருசுடரா யெரிபுனலாய் வானாய்மற்று
மெம்மானெவ் வுயிர்களுமாய் நின்றானென்றே
இயம்புவார் துணிவென்னே யிருந்த வாறே''

எனவரும் திருக்கலம்பகச் செய்யுளில் காண்க.

(வி. உ.) 'இன்பமுறும்' என்னும் சொற்களை வருவித்து முடிக்க. 'வானே நிலனே, வளியே, புனலே, என்பனவற்றி லுள்ள ஏகாரங்கள் எண்ணுப் பொருளன. வருவித்த சொற்கள் இசையெச்சங்கள். 'தானறிவோம்' என்பதில் தான் அசை.

வாளனைய கண்மடவாய் வந்துநீ யெங்களை
நாளை யெழுப்புவ தென்றலும் நாணாதே
மீளவும் மெய்ம்மறந்து வீணே துயிலுதியோ
வேளை முனிந்தானை விண்ணோர் பெருமானுக்
காளாகி நாமிங் கடியிணைகள் தாம்பாட
நாளாயும் நீமறந்து நண்ணா துறங்குதியோ
கேளா யுனக்குக் கிடையாத கேவலியை
ஏளாய் எமக்கும் இறைஞ்சேலோ ரெம்பாவாய் (6)

(பொ. உ.) வாள் போன்ற கண்களை யுடைய இள மாதே, நீ, ''நாளை உம்மிடம் வந்து உம்மை எழுப்புவேன்'' என்று சொன்ன சொல்லுக்கும் நாண மடையாமல் (முன்னாள் துயின்றாற் போல்) மீண்டும் மெய் மறந்து காலம் வீணாகும்படி துயில்கின்றாயோ? மன்மதனை முனிந்தவனுக்கு (மண்ணவர்க்கே யன்றி) விண்ணவர்க்கும் பெருமானாகிய அவ்விறைவனுக்கு நாமிங்கு ஆட் செய்பவர்களாய் அவன்தன் இரண்டு பாதங்களைப் பாடுவதற்கு ஏற்றதாகிய சிறந்த மார்கழி மாதத்து

முதல் நாள் வந்துள்ளதாகவும், நீ அதனை மறந்து எம்பால் வாராமல் துயில்கின்றனையோ ? உன்பால் அன்புடையவர் களாகிய எமக்கு எளிமையான மாதே (நாங்கள் சொல்வதைக்) கேட்பாயாக. உனக்குக் கிடைப்பதற்கரிய அக்கேவல ஞானத்தை யுடைய அருகப் பெருமானை (நீ வந்து) உன் பொருட்டு மட்டுமே யன்றி எங்கள் பொருட்டும் வணங்கு வாயாக.

(வி. உ.) விண்ணோர் பெருமான் - நான்கன் தொகை. ஈண்டு விண்ணோர்க்கும் என்னும் எச்சப் பொருளுடன் கூடிய உயர்வு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. கேளாய் - ஏவல் ஒருமை வினை முற்று. ஏளாய் - எளிமை என்னும் பண்புப் பெயர், 'ஈறு போதல்' என்னும் நன்னூல் சூத்திரத்தின்படி மை விகுதி நீங்கி, இடை இகரம் கெட்டு முதல் நீண்டு 'ஏள்' என நின்று ஆள் என்னும் விகுதி புணர்ந்து ஏளாள் என நின்று, விளி வேற்றுமை ஏற்று, ளகரம் யகர மாய்த் திரிந்து ஏளாய் என்றாயிற்று.

ஆண்டாள் திருப்பாவையின் முதற் பாட்டுள் 'மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்' என்றது ஈண்டு 'நாளாயும்' என்பதனோடு ஒரு புடை யொப்பு நோக்கற் குரியது. நாளாயும் என்பதில் உள்ள உம்மை எச்சப் பொருளுடன் கூடிய உயர்வு சிறப்புப் பொருளது. வேலை முனிந்தானை என்பதில் நான்கன் உருபின் பொருளில் இரண்டன் உருபு வந்தது உருபு மயக்கம்.

**மாதே யறிகிலையோ வானோ ரறிவரியான்**
**போதேறு மீசன் புனித னருளுடையான்**
**பாதார விந்தம் பணிந்தேத்திப் பல்லியங்கள்**
**ஓதிய பேரோசை யோரா துறங்குதியோ**
**சோதிமதி முக்குடையான் சோம ரவியொளியான்**
**காதிவினை கடிந்த கற்பகனை நீமறந்து**
**பேதையர்போல் நீயும் பிரமித் தறிவழிந்தாய்**
**ஈதே துயிலின் பரிசேலோ ரெம்பாவாய்** (7)

(பொ. உ.) தாமரை மலரில் நடந்த இறைவன் மண்ணோரால் மட்டுமன்றி விண்ணோராலும் அறிதற்கு அருமையானவன்; பரிசுத்தன்; அருளுடையவன்; மாதே, அவன் குணங்களை நீ யறியாயோ (அடியார்கள் அவனுடைய) பாதங்களாகிய தாமரை மலர்களை வணங்கித் துதித்துப் பல வாத்தியங்களை முழங்கி ஓதியதனால் உண்டாகிய பெரிய ஒலியையும் கேட்காமல் உறங்குகின்றாயோ? ஒளியை யுடைய சந்திரனைப் போன்ற முக்குடைகளை யுடையவனும் உயிர்கள்பால் அருள் உடைமையாலும் தீமையைக் காய்தலாலும் சந்திரனையும் சூரியனையும் போல் குளிர்ச்சியும் வெப்பமும் ஆகிய ஒளியை யுடையவனும் முத்திக்குப் பாதகமா யுள்ள கருமங்களை நீக்கிய கற்பகத்தை (அருகனை) நீ மறந்து, கற்பன கற்றுணர்ந்த நீயும் கல்லாதவர்களைப் போலத் திகைப்புக் கொண்டு அறிவு அழியப் பெற்றாய்; துயிலின் தன்மை இப்படி அறிவு அழிந்து இருப்பது தானே?

(வி. உ.) வாளேரும் பேரோசையும் என்பனவற்றின் எச்சப் பொருளோடு கூடிய உயர்வு சிறப்பும்மைகள் தொக்கியது செய்யுள் விகாரம். நீயும் என்பதன் கண்ணுள்ள உம்மை உயர்வு சிறப்புப் பொருளது. முக்குடைகள், சந்திராதித்தியம், சகல பாசனம், நித்திய விநோதம் என்பனவாம். "முச்சகம் நிழற்றும் முழுமதி முக்குடை அச்சுதன் அடி தொழு தறைகுவன் சொல்லே" என்பது பவணந்தியா ரியற்றிய நன்னூல் சொல்லதிகாரத்தின் கடவுள் வாழ்த்து. காதி - முத்திக்குப் பாதகமா யுள்ள கருமம். இக்கருமம் எண் வகைப்படும்; அகாதி நான்கு, காதி நான்காகும். கற்பகனை என்பதற்கு ஞான நூல்களைக் கற்கும் அகத்தில் (உள்ளத்தில்) உள்ளவனை என்றும் கூறலாம்.

அனாதி நீதனை யாகமத்தின் மெய்ப்பொருளைச்
சினாலயம்போ லெங்கும் சிறந்த சினவரனை
மனாலயங்க ளெங்கு மகிழ்ந்த மறைப்பொருளைக்
கனாவினுநா மறவாத காரணற்கே யாளாவோம்

அநேகமுந் தானு யணுவுக் கணுவாகி
முனீந்திரனுய் நின்ருர்க்கு முன்னே யுரைசெய்வோம்
வினசங் கெடுத்து விரதங்கள் தேறுவோம்
நினைகங்கள் தீரும் பரிசேலோ ரெம்பாவாய் (8)

(பொ. உ.) மட மாதே, ஆதியும் நாசமும் இல்லாதவனும் ஆகமங்களில் கூறப்படும் உண்மைப் பொருளானவனும் சிவாலயம் போல் எல்லா இடங்களிலும். சிறந்து விளங்கும் சிவபரனும் அன்பர்களுடைய மனமாகிய கோயில்கள் எல்லாவற்றிலும் மகிழ்ந்து வீற்றிருக்கும் மறைப் பொருளா யிருப்பவனும், நாம் கனவின் கண்ணும் மறவாத காரணனு யிருப்பவனும் ஆகிய இறைவனுக்கே அடியவர்களாவோம்; எல்லாப் பொருள்களும் தானேயாய் அணுவுக்கும் அணுவாய் நின்ற அவ்விறைவனுக்கு முன்னே (சென்று) நம்முடைய கருத்தைச் சொல்வோம்; நம்முடைய உயிர்களின் நலங்கள் அழிதற்குக் காரணமாயுள்ள பாவச்செயல்களை ஒழித்து நாம் ஏற்றுச் செய்வதற்குரிய விரதங்களைத் தெளிந் தறிவோம். இவை நின்னுடைய பாவங்கள் நீங்குதற்கு உரிய பண்புகளாகும்.

(வி. உ.) முதற்கண் 'மடமாதே' என்னும் சொல்லையும் ஈற்றில் ஆகும் என்னும் சொல்லையும் வருவித்துரைக்க. நின்+அகம் = நின்னகம் இது எதுகைக்காக நினகம் என வந்துளது; னகரம் எதுகை நோக்கி நீண்டது. அகம்=பாவம்.

வாரணங்கள் கூவ வரிவண் டிசைபாடப்
பேரிகையுஞ் சங்கும் பிறதூ ரியமுழங்கத்
தாரணியும் பிண்டி நிழற் ருமரையின் மீதிருந்த
வீரியனுர் பாடலோ வீதிதொறுங் கேட்டிலையோ
காரிகையாய் நீயின்னங் கண்கள் விழித்திலையோ
பாரீச பட்டர்மேற் பாசமு மித்தனையோ
மாரனெடு காலனை முன்வாரா மலேகாய்ந்த
வீரேழ் புவிக்கிறையைப் பாடேலோ ரெம்பாவாய் (9)

(பொ. உ.) கோழிகள் கூவவும், வரிகளை யுடைய வண்டுகள் இசையைப் பாடவும், முரசமும் சங்கமும், மற்றைய வாத்தியங்களும் முழக்கம் செய்யவும், மலர்கள் அழகினைச் செய்யவும், அசோக மரத்தின் நிழலில் தாமரை மலரின்மேல் நடந்தருளிய வீரியனாரைப் பற்றிய பாடல்கள் வீதி தோறும் பாடுவதால் உண்டாகும் ஒலியை அழகிய பெண்ணே, நீ கேட்டிலையே; அந்தப் பாரீச பட்டரிடத்து உனக்குள்ள அன்பும் இவ்வளவு தானோ? மன்மதனுடனே எமனையும் தம் முன்பு வாராமல் இருக்கும்படி கோபித்து ஒழித்த பதினான்கு உலகங் களுக்கும் இறைவராகிய அவரை (எழுந்து வந்து) பாடுவாய்.

(வி. உ.) வரிவண்டு என்பதற்குப் பாட்டுப் பாடுதலை யுடைய வண்டு எனக் கூறுதலும் ஆம். பிற தூரியமும் என் பதன் எண்ணும்மை தொக்கது செய்யுள் விகாரமாம்; முன் என்பதற்கு முற்காலத்தில் என்று உரை கூறுதலுமாம். வரு வித்த சொற்கள் இசை யெச்சங்கள்.

பாரீச பட்டர்-பார்சுவ நாதஸ்வாமியைக் குறிக்கும். இவர் இருபத்து மூன்றும் தீர்த்தங்கரர்.

உம்பர் பெருமா னுலக முழுதுணர்ந்தான்
செம்பொன் னெயில்மூன் றுடைய சிநவரானார்
வெம்பு வினையகற்றி வேத மொழிந்தருளும்
சம்பு வருகன் சகல செனனனந்தன்
பிம்ப வடிவ னுயர்வீர னசோகத்தான்
நம்பெருமான் கோயில் நயந்த பிணாப்பிளைகாள்
தம்பேரே தூரேது தமரா ரயலாரார்
எம்பரிசாற் பாடும் பரிசேலோ ரெம்பாவாய் (10)

(பொ. உ.) தேவர்கட்குத் தலைவனும் உலக மெல்லாவற்றை யும் உணர்ந்தவனும் செம்பொன்னால் ஆன மூன்று மதில்களை யுடையவனும் சிநவரனும், கொடிய வினைகளைப் போக்கி, வேதங்

களை மொழிந்தருளிய சம்பு அருகனும், சகல சென்னும் முடிவு இல்லாதவனும் ஒளி வடிவனும் சிறந்த வீர முடையவனும், அசோக மரத்தின் நிழலில் வீற்றிருப்பவனும் ஆகிய நம் பெருமானுடைய கோயிலை விரும்பிய பெண் பிள்ளைகளே, அப்பெருமானுக்கு ஊர் ஏது? பெயர் ஏது? சுற்றத்தார் யார்? அயலார் யார்? ஆகையால் அவனை எங்ஙனம் பாடுவது? நம்முடைய முன்னோர் கொண்ட விதமே யாகும்.

(வி. உ.) 'பெண் பிள்ளைகளே, நாம் கருதினபடி அவனைப் பாடுவோம் வம்மின்' என்பதனை இசை யெச்சமாக வருவிக்க. ஊர், பேர், சுற்றம் அயல் இதுவிது வென்றிருப்பின் அவற்றிற்குத் தக்கபடி பாடுதல் கூடும். ஊரும் பேரும், சுற்றமும் அயலும் இன்மையின் நம் முன்னோர் கருதின வண்ணமே பாடுவோமாக எனக் கொண்டனர் என்க. சிநவரனார் என்பதில் உள்ள தன் பேர் என்பது எதுகை நோக்கி 'தம் பேர்' என நின்றது. 'பிணா' என்பது உயர்திணைப் பெண் பாலை யுணர்த்தி நின்றது. 'பெண்ணும் பிணாவுமக்கட்குரிய' என்பது தொல்காப்பியச் சூத்திரம். 'பிளை' பிள்ளை யென்னும் சொல்லின் இடையிலுள்ள ளகர வொற்று, குறைந்து வந்தது இடைக்குறை.

தண்ணொன்ற பொய்கை புகுந்து சலசலென
வண்ண மலர்க்கையால் குடைந்து குடைந்தாடி
நண்ணு மலர்ச் சேவடியை நாவார நாம்பாடி
மண்ணுலகில் வந்து பிறவா வகையளிப்பாய்
கண்ணே கருத்தே கடவுளே நாரணனே
எண்ணே வெழுத்தே யிசையே யியல்மொழியே
விண்ணோர் பிரானே விதியே வினைப்பயனே
எண்ணும் வகைபாடி யாடேலோ ரெம்பாவாய் (11)

(பொ. உ.) (மாதே) குளிர்ந்த பொய்கையில் புகுந்து, அழகிய மலர் போன்ற கைகளால் சலசல என்னும் ஒலி உண்டாகும்படி குடைந்து குடைந்து நீராடி, அடியார்கள்

சேரும் மலர் போன்ற செம்மை யாகிய திருவடிகளை நாங்கள் பாட, மண்ணுலகில் (நாங்கள்) வந்து பிறவாத வகையை (எங்களுக்கு) அளிப்பவனே, கண்போலும் சிறந்தவனே எங்கள் கருத்தாய் இருப்பவனே, கடவுளே, நாரணனே, கணித நூலா யிருப்பவனே, இலக்கண மானவனே, இசையா யிருப்பவனே, இயற்றமிழா யிருப்பவனே, தேவர்களுக்குத் தலைவனே, வாழ்வுக்கு வழி வகுத்தவனே, வினைகளின் பயனை யறிந்தவனே, (என்று) அடியவர்கள் எண்ணும் வகை அவனுடைய குணங்களைப் பாடி ஆடுவோம்.

**நீத்திப் பிறப்பறுக்கும் நேசத் துடன்பாடிப்**
**பூத்தபொழில் சூழ்கச்சிப் புங்கவனைப் புண்ணியனை**
**ஏத்துங் குவலயமு மெண்டிசையு மண்டர்களும்**
**பாத்துய்யு மாறு படைத்தளித்துப் பற்றழித்து**
**நாத்தழும்ப வேத்தி நடஞ்செய் சிலம்பலம்பக்**
**கோத்த மணிமுத்துங் குழலு மணங்கமழ**
**வாய்த்த மலர்ப்பொய்கை மறுகக் குடைந்தாடி**
**ஏத்தும் வகைபாடி யாடேலோ ரெம்பாவாய்** (12)

(பொ. உ.) பொருளைப் படைத்துக் காப்பாற்றி யதன் கண் பற்றினை யழித்து யாவருக்கும் அப்பொருள் உரிமையாகும் படி அதனைப் பங்கிட்டுக் கொடுத்து, துறந்து இப் பிறப்பறுக்கும் ஆசையோடு, மலர்ந்த பூக்களைக் கொண்ட மரங்களை யுடைய சோலைகள் சூழ்ந்த காஞ்சீபுரத்தில் வீற்றிருக்கும் புங்கவனைப் புண்ணியனைக் குவலயமும் எட்டுத் திக்குக்களும் அண்டங்களும் தாம் உய்யுமாறு ஏத்தும்; ஆகையால் நாமும் நாவின் கண் தழும்பேற அவ் விறைவனை ஏத்தி நடனம் செய்யும் பாத சிலம்புகள் ஒலிக்கவும்; மாலையாகக் கோத்த அழகிய முத்துக்களும் கூந்தல்களும் வாசனை வீசவும்; நன்கமைந்த தாமரைத் தடாகம் கலங்கவும் நீரில் குடைந்தாடி, மெய்யன்பர்கள் ஏத்தும் விதம் பாடி யாடுவோம்.

(வி. உ.) நீத்து + இப்பிறப்பறுக்கும் = எனக் கொள்க. ஏத்தும் என்பது வினைமுற்று. பாத்தல்—பகுத்தல்;

“ துகடீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்
பகடு நடந்த கூழ் பல்லாரோ டுண்க
அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும் ”

என்னும் வெண்பாவை, இப்பாட்டு நினைப் பூட்டுகின்றது. இறைவனை அடைதற்குரிய உபாயங்களை முறைப்படுத்திக் கூறும் வகை பெரிதும் பாராட்டற் குரியதாகும்.

“ பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை ”

“ தம்மில் இருந்து தமது பாத்துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு ”

என்னும் அருமைக் குறள்கள், பாத்துய்யுமாறு படைத்தளித்து என்னும் சீரிய அடியோடு ஒப்பு நோக்கி உவத்தற் குரியன வாகும்.

எங்கோ னருக னசல னெறியமலன்
செங்கோ னடத்துமிறை சேமத் துணையரங்கன்
வங்கார வண்ணன் வரத னகிலகுணன்
சங்கார காலன் சகல வினையறுக்கும்
சிங்கா சனத்திருந்த செல்வன் திருந்தடியைப்
பொங்கார்வந் தீரப் புலம்பிப் புகழ்பாடிக்
கெங்கா சலமுதித்த கேவலமாம் பொய்கைதனில்
பங்கே ருகப்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய் (13)

(பொ. உ.) நமக்குத் தலைவனும், சலிப்பற்றவனும், நன்னெறியின்கண் நின்றவனும். மலங்க ளற்றவனும், செங்கோலை

எங்கும் செலுத்தும் இறைவனும், உயிர்கள் இன்பம் அடைதற்குத் துணையா யிருப்பவனும் (ஞான) சபையில் இருப்பவனும், பொன் போன்ற நிறத்தை யுடையவனும் (அடியவர்கள்) வேண்டியவற்றை அளிப்பவனும், எல்லாவித நற்குணங்களை உடையவனும், அழிக்கும் தொழிலுக்கு எமனாய் இருப்பவனும், எல்லாத் தீவினைகளையும் நீக்கி அருளும் சிங்காசனத்தில் வீற்றிருக்கும் செல்வனும் ஆகிய அருகனுடைய (உயிர்கள்) திருந்துதற்குக் காரணமாகிய அடிகளின் புகழை மேன்மேலும் பெருகும் ஆசையானது தணியும்படி, பாடி அவ்வன்பின் பெருக்கால் அழுது, ஞானமாகிய கங்கையினின்றும் தோன்றிய கேவல ஞானமாகிய தாமரைப் பொய்கையின் புனலில் (பாவாய் நீ) பாய்ந்து ஆடுக.

(வி. உ.) திருந்தடிப் புகழைப் பொங்கு ஆர்வம் தீரப் பாடிப் புலம்பி ஞானமாகிய கங்கா சலமுதித்த கேவலமாம் பங்கேருகப் பொய்கைப் புனல் தனில் (பாவாய்) பாய்ந்து ஆடுக என இயைக்க. கேவல ஞானம் என்பது ஞானங்களிலே தலை சிறந்தது. ஞானம், ஐந்து வகைப்படும் (1) இயற்கையறிவு (மதிஞானம்) (2) நூலறிவு (சுருதஞானம்) (3) தன்னுடைய முற்பிறப்பை அறியும் அறிவு (அவதி ஞானம்) (4) பிறருடைய உள்ளங்களையும் அவர்கள் முற்பிறப்பையும் அறியும் அறிவு (மனப்பர்யை ஞானம்) (5) மூவுலகங்களையும் ஒருங்கே அறியும் அறிவு (கேவல ஞானம்) என்பன வாகும்.

**மகரக் குழலாட மாணிக்கப் பூணாடச்**
**சிகரக் குழலாடச் செறிவண் டிசைபாட**
**முகரப் புனலாடி முக்குடையான் றாள்பாடி**
**விகலக் கவிபாடி வேதப் பொருள்பாடிச்**
**சகலச் சிநத்திறைவன் தன்னனைய தாள்பாடிப்**
**புகலாம் பதியருகன் பொற்றா மரைபாடி**
**இகலார்ந் தெனையளித்த வெந்தையான் றாள்பாடிப்**
**பகரும் பிறப்பறவே பாடேலோ ரெம்பாவாய்** **(14)**

(பொ - உ.) நங்காய், மகரந்தப் பொடியுடைய கூந்தல் ஆடவும், மாணிக்கங்களைப் பதித்த அணிகள் ஆடவும், தலையி லுள்ள குழல் அவிழ்ந் தாடவும், மலர்களில் மொய்த் திருக்கும் வண்டுகள் ஒலிக்கும்படி சங்குகளை யுடைய பொய்கையில் நீராடி, மூன்று குடைகளை யுடைய இறைவனுடைய திருவடி யைப் பாடி, நமது குறைபாட்டைக் கூறும் கவிகளைப் பாடி, வேதப் பொருள்களைப் புகழ்ந்து பாடி, சகல சினர்களாகிய தீர்தங்கரர்களுக்கு முதல்வராம் ஆதிபகவனைத் தனக்குத்தானே ஒப்பாகிய பாதத்தைப்பாடி (எல்லா வுயிர்களுக்கும்) புகலிடமா கிய அவ்வருகனது அழகிய தாமரையைப் பாடி (தன்) ஞானமா கிய வன்மையால் (என் மனத்தின்கண்) பொருந்தி என்னைத் (தீவினை அணுகாமல்) காத்தருளிய (எனது நலத்தினை விரும்பு வதால்) என் தந்தை போன்றவனாகிய அப்பெருமானுடைய பாதங்களின் புகழைப் பாடி, யாவர்க்கும் துன்பத்தைக் கொடுக் கும் பிறப்பாகிய கட்டை அறுத்தற்கு அப்பிரானைப் பாடுவோ மாக.

(வி - உ.) முகரம்-சங்கு. விகலம்-குறைபாடு; பொன்- அழகு; இகல் - வன்மை. ஈண்டுப் பொற்றாமரை என்றது அவர் நடந்த தாமரை மலரை; 'மலர்மிசை யேகினான்' என்பதால் அது விளங்கிக் கிடந்தது. 'பகரும் பிறப்பறவே பாடு' என்பது 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேரா தார் என்பதோடு ஒப்பு நோக்கற்குரியது.

**அருளா லொருகா லறவாழி யான்ற**
**பொருளான சோதி புலம்பி மிகப்பொங்கி**
**உருகேர் பிரானென் றுணர்வீர் கண்ணீர்மலர்**
**சொரியா ருறவனையார் வானவரைத் தாள்பணியார்**
**குருநாதற் கன்பாய்க் குழைந்து வசமாகி**
**மருளாம் பிறப்பறுத்து வாழ்விப் பவாவரோ**
**இருளார்ந்த பூங்குழலீர் இசையார் அவிரோதி**
**பரிசார்ந்த பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய் (15)**

(பொ - உ.) இருள்போன்ற கருநிறம் பொருந்திய அழகிய கூந்தலையுடைய மாதர்களே, இந்திரன் முதலிய தேவர்களுடைய

அடிகளை வணங்காதவர்களா யிருக்கும் அவர்கள் அத்தேவர்களுக்கு அன்பாய்க் கண்களினின்றும் நீரைச் சொரியார்கள்; அவர்களுக்கு மலர்களைச் சொரியார்கள்; அவர்களுடைய குருநாதராகிய அருகர்பால் அன்புடையவர்களாய் மனம் குழைந்து அவ்விறைவனுடைய வசத்தினராய் மயக்கம் பொருந்திய பிறப்பாகிய தளையை அறுத்து நம்மையும் வாழ்விப்பவர்கள் ஆவார்கள்; (அத்தன்மையை நீங்களும் அடைதற் பொருட்டு) அருளாலும் அற வாழியாலும் நிறைந்த பொருளான ஒளி வடிவை யுடைய அவ்விறைவனே நம் பெருமானென்று உணர்ந்து ஒரு போதாயினும் அன்பு மிகப் பொங்கி வளரப் பெற்று மனம் உருகிப் புலம்பிப் புகழ் அமைந்த அவிரோதி (பகைமை யில்லாதவர்) என்பவருடைய குளிர்ந்த தன்மை நிறைந்த மலர்களை யுடைய பொய்கையில் நீராடுவீர்களாக.

(வி - உ.) கண்ணீர் மலர் சொரியார் என்பதைக் கண்ணீர் சொரியார், மலர் சொரியார் எனப் பொருள் கொள்க. உருகிர், உணர்வீர் என்பவை முற்றெச்சங்கள். 'அவரோ' என்பதில் உள்ள ஓகாரம் அசை. அவிரோதி என்பார் இந்நூலை இயற்றியவர். இவர் இங்குத் தம்மை பிறர் போலக் கூறியது உணர்க. பூங்குழலீர் ஆடு என்பது பன்மையில் ஒருமை வந்த வழுவமைதி; சோதியே பிரான் என்று உணர்வீரென இயைக்க. இதில் சோதியே என்னும் பிரிநிலை ஏகாரம் தொக்கது, செய்யுள் விகாரம்.

**பிறவிப் பெருங்கடலை நீந்திய பெய்வளையாய்**
**உறவுத் தமர்வாழும் உச்சந்த வாழ்மலைமேல்**
**அறமிக வுஞ்செய்யும் அம்மை யடியிணைகள்**
**நறைமிக்க பூவணையால் நல்கிப் பொழிந்தேத்திக்**
**கறவைத் திரள்காத்த கார்வண்ண னுக்கிளையான்**
**நிறமிக்க நேமிசிநன் நீள்பதங்கள் தான்பாடித்**
**திறமுற்ற மாமுனிவன் சீரருளால் எங்கும்**
**நிறையப் பொழியும் மழையேலோ ரெம்பாவாய் (16)**

(பொ. உ.) (முன் கையில்) பெய்யப் பெற்ற வளையல்களை அணிந்துள்ள மாதே, பிறவியாகிய பெரிய கடலைக் கடந்தவ

னும்; (உயிர்க்கு) உறவினை யுடைய உத்தமர்களாகிய பெரியோர்கள் வாழுகின்ற உச்சந்த மலை மேல் (ஊர்ஜயந்தி) அறவுரையை மிகுதியாகச் செய்பவனும் கறவைகளின் கூட்டத்தைக் (கோவர்த்தனம் என்னும் மலையை ஏந்திக்) காத்தருளிய மேகம் போன்ற கரிய திருமேனியை யுடைய கண்ணனுக்கு இளைய சகோதரனாகிய நேமிநாதன் என்னும் பெயரை யுடையவனுமாகிய சினனுடைய புகழ் மிக்க பாதங்களைத் தேன்மிக்க பூவணையால் மிகுதியாகப் பொழிந்து ஏத்திப் பாடினால் ஞானமாகிய வன்மை பொருந்திய அம்முனிவனது சிறந்த அருளாலே மேகம் மழையை, ஆறு, ஏரி முதலியவற்றில் நீர் நிறையும்படி பெய்யும் ஆதலின், நீ, பாடுக.

(வி. உ.) "மறமே முனிந்து மயிலாபுரி நின்று மன்னுயிர்கட்கு அறமே பொழியும் அருட் கொண்டலே" என இந் நூலாசிரியர் திருநூற்றந்தாதியில் பாடியிருத்தல் காண்க. "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவனடி சேராதார்" என்னும் குறள் மொழி ஈண்டு நோக்குக.

கறவை-பசுக்கள்; பால் பகா அஃறிணைப் பெயர்; கறக்கப் படுதலின் பசுக்களுக்குக் கறவை என்பது காரணப் பெயராயிற்று. உறவு என்பது "உயிர் முதல் மொழிவர, முற்று மற்றொரோவழி" என்னும் சூத்திரத்தால் ஈற்று முற்றுகரம் கெட்டு வருமொழியோடு கூடி 'உறவுத்தமர்' என்றாயிற்று, இனிஉற-மிகுதியாக எனலுமாம். மேல் குறித்த ஊர்ஜயந்தி மலையில் நேமிநாதர் வீடுபேறுற்றார். இம்மலை குஜரத் பிரதேசத்தில் உள்ளதாகும்.

**இந்திரர்கள் பாலு மிருடிகள் தம்பாலு**
**மந்தவர்கள் தம்மி லடியோங்கட் கன்பாகிக்**
**கொந்தலரும் பூங்குழலாய் கோமா னமையாள**
**வந்துநம் வாய்கடொறும் வாழ்த்தி மகிழ்ந்தருளீர்**
**அந்தமி லாகமங்க ளாராய வந்தருளும்**
**விந்தை பரனருகன் வீரனடி பரவிச்**
**சுந்தர மாகத் துதித்துத் தொழுதேத்தி**
**நைந்துருகிப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய் (17)**

(பொ. உ.) கொத்துக்களில் மலரும் பூக்களை யணிந்த பெண்ணே, இந்திரர்களுள்ளும், முனிவர்களுள்ளும், சிறந்த தவத்தினை யுடையவர்களைக் காட்டிலும் அடியவர்களாகிய நமக்கு அன்புடையவனாகிய நமது தலைவனும் அருகன் நம்மை யாளும் பொருட்டு, படுக்கையை விட்டு எழுந்துவந்து நமது வீட்டு வாயில்தொறும் வாழ்த்தி மகிழ்வீராயின், முடிவில்லாத ஆகமங்களை நாம் ஆராய்வதற்கு அருள்புரியும் அற்புதத்தினை யுடைய பரனும், அருகனும், மகா வீரனுமாகிய அவ்விறைவனுடைய பாதங்களை அழகாகத் துதித்து, வணங்கி, ஏத்துதல் செய்து, மனம் கரைந்து, மலர்களையுடைய பொய்கையில் பாய்ந்து நீராடுவீராக.

(வி. உ.) 'பூங்குழலாய்' என்று ஒருமையில் கூறிப் பின்பு 'மகிழ்ந்தருளீர்' என்று பன்மையில் கூறியது ஒருமைப் பன்மை மயக்கம்; பல முறை யெழுப்பியும் எழாமையால் ஒருமையால் விளித்து, மெய்யடியார் திறத்துச் செய்த அபசார வுணர்ச்சி யுடனே தோன்ற, மகிழ்ந்தருளீர் என்று பன்மையில் கூறப்பட்டது எனினும் அமையும்.

ஆதி யருக னடியிணைகள் தான்பரவச்
சோதி யெரிமௌலித் தொன்மணிகள் தூற்றினபோல்
ஓதத் தெழுகதிரோ னொளிவந்து மிக்கெறிப்பச்
சீதத்த வண்ணமலர்ச் செந்தாமரை சிதறப்
பேதித்துலகெங்கும் பெண்ணாணலி பிறவாய்
மேதினியாய் நீராய் வியனு யெரிவளியாய்
ஓதிய வேதத் துறைகின்ற வும்பர்பிரான்
பாதத்திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய் (18)

(பொ. உ.) உலகின்கண் எல்லா விடங்களிலும்; பெண்ணும் ஆணும், அலியும், பிறவும், பூமியும், நீரும் நெருப்பும், காற்றும் ஆகிய பேதங்களை யுணர்ந்து, ஓதிய வேதத்தின் கண் உறைகின்ற தேவ பிரானாகிய அருகன் பாதத்தின் அருள் வன்மையைப் பாடி, ஆதியாகிய அவ்வருகன்தன் (ருஷபதேவன்) இரண்டு திருவடிகளையும் பரவும் பொருட்டு. ஒளி வீசும் தன்

கிரீடத்தின்கண் அமைந்த பழமையாகிய மணிகளைப் போலத் தான் கிரணங்களைப் பரப்பிக் கடலினின்றும் தோன்றும் கதிரவனது ஒளியானது வந்து பெருகித் தம்மேல் வீசுதலால் நல்ல நிறத்தைப்பெற்றனவாய்க் குளிர்ச்சியுடைய பொய்கையில் உள்ள செந்தாமரைகள் சிதறும்படி அப்பொய்கையில் குடைந்து நீராடுவீராக.

(வி. உ.) 'ஆதியருகன்' என்பது திருக்குறளின் கடவுள் வாழ்த்தின் முதற் குறளில் 'ஆதிபகவன்' எனவும், சிலப்பதிகாரத்தில் மதுரைக் காண்டம், காடு காண்காதையின் முதற்கண் 'ஆதியில் தோற்றத் தறிவனை வணங்கி' எனவும் வந்துள்ளமை காண்க. 'தலைவர்தம் தலைவர்க்கும் தலைவா' என்றார் பிறரும்: பரவ — செயவெனெச்சம்; ஓதம் — குளிர்ச்சி. எறிதல்—வீசுதல்.

**பக்திகள் செய்ய அறியோம் பலகாலும்**
**சித்தமொன்ருகித் திருநாமங் கொண்டாடிக்**
**கொத்தலரி பூம்பிண்டிக் கோமானுக் காளாகிப்**
**பொற்ருமரையிற் புகுந்து துளைந்தாடி**
**எத்திசையும் போற்று மிறைவ னடிவணங்கி**
**உத்தமனை யோதி யுணரா துறங்குதியோ**
**ஒத்தொழுகி நற்பிறப்பை யோர்ந்து மனமார**
**நித்திலஞ்சேர் பொய்கை யாடேலோ ரெம்பாவாய் (19)**

(பொ. உ.) எல்லாத் திக்குகளிலுமுள்ள பெரியோர்களும் கொத்துக்களில் மலரும் மலர்களை யுடைய அசோக மரத்தின் நிழலிலே வீற்றிருக்கும் இறைவனுக்கு அடியார்களாய் மனம் வழிப்பட்டு, அப்பெருமானுடைய திருநாமங்களைப் புகழ்ந்துரைத்துப் பொய்கையில் உள்ள தாமரை மலர்களூடே கலந்து நீராடி வணங்கிப் போற்றும் அவ்விறைவனுடைய திருவடிகளை வணங்கிப் பலவகையாலும் பக்தி புரியும் விதத்தை நாமறியோம். பாவாய், அவ்விறைவன்தன் குணங்களைக் கூறும் நூல்களைக் கற்றும் உணர்ந்திடாமல் உறங்குகின்ருயோ? எங்களோடு சேர்ந்து ஒத்தொழுகிச் சிறந்ததாகிய இம்மனிதப் பிறப்

பின் இயல்பை உணர்ந்து, முத்துக்கள் பிறக்கும் பொய்கையில் மனத்தின் ஆசையானது தணியும்படி நீராடுக.

(வி. உ.) முத்துக்கள், நத்தை, சங்கு, மீன்தலை முதலியவற்றில் பிறக்குமென்பது நூற் கொள்கை. நத்தை, சங்கு மீன் முதலியவை குளத்திலுள்ளமையின் 'நித்திலம் சேர் பொய்கை' எனப்பட்டது.

வாழி யருகன் மலர்த்தா மரைத்தா மரையிரண்டும்
வாழியா மாகில் மலரிணைகள் தாளுைம்
வாழியா மந்த மலர்ச்சே வடியிணைகள்
வாழியெல் லாவுயிர்க்கும் வன்ன மலரடிகள்
வாழியெல் லாவுயிர்க்கும் வாழ்வா மலர்த்தாள்கள்
வாழிய வானோர்கள் வணங்கு மலர்ப்பதங்கள்
வாழியெமை யாட்கொண்ட ருளுகின்ற புண்டரிகம்
வாழி மலர்க்கழல் நீராடேலோ ரெம்பாவாய் (20)

(பொ. உ.) அருகதேவனுடைய தாமரை மலர் போன்ற பாதங்கள் இரண்டும் வாழ்வனவாக; வாழவேண்டுமானல் அவ்வருக தேவன் மலர்போன்ற இரண்டு பாதங்களும் வாழ்ந்திடல் வேண்டும்; அந்த மலர்போன்ற செம்மையான பாதங்கள் இரண்டும் வாழ்வு பெறுவனவாம்; எல்லா வுயிர்களுக்கும் வீடாகிய வாழ்வு உண்டாகுவதற்குக் காரணமாகிய மலர் போன்ற அவனுடைய பாதங்கள் வாழ்வன வாகுக; தேவர்கள் வணக்கம் செய்யும் மலர் போன்ற அவன் பாதங்கள் வாழ்வன வாக; எங்களை ஆட்கொண்டு அருள் புரியும் அத்தேவனுடைய தாமரை போன்ற பாதங்கள் வாழ்வன வாகுக; அவ்வருகனுடைய மலர் போன்ற பாதங்கள் வாழ, மார்கழி நீராடுவாயாக.

(வி. உ.) இணை - இரண்டு; வன்னம் - அழகு இவ்விறுதிப் பாட்டில் அடிதோறும் அருகனுடைய பாதங்களைப் பலப்

பல வகையில் வாழ்த்தி யுள்ளது பாராட்டுக் குரியது. இதனல் அவ்வருக தேவனுடைய மலரடியின் மாண்பினை அறிவித்த வாரும். இறைவனுடைய பாதங்கள் மக்களின் உயர்வுக்கு ஏது என்பது யாவரும் ஒப்ப முடிந்த வுண்மையாகும். திருக் குறளில், கடவுள் வாழ்த்தில் திருவள்ளுவர் இயற்றியருளிய பத்துக் குறள்களில் இறைவனுடைய மலரடியின் மாண்பு ஏழு குறள்களில் இடம் பெற்றுள்ளமை ஈண்டுக் குறிப்பிடத் தக்க தாகும்.

ஐம்பொறிகளையும் வெற்றி கொண்டமை புலப்பட மலர்க் கழல் என்று கூறி, வீரகண்டையினை யணிந்த அவ்வீரனுடைய மலர் போன்ற பாதங்கள் என்னும் பொருளைத் தோற்றுவித்த நயம், பெரிதும் பாராட்டுதற்குரியதாகும்.

இறுதியில் சில பிரதிகளில் கீழ்வரும் பாக்கள் காணப்படுகின்றன.

முத்தன்ன வெண்ணகையா யின்ன முறங்குதியோ
அத்த னமல னறிவன சோகத்தான்
சுத்தன் சுகதன் சுரர்மகிழு மெம்பிரான்
சித்தன் சிநவரன்றன் சேவடியை வாழ்த்துதற்கு
நத்தமர்க ளெல்ல நயந்துதி யோதுமிசை
யெத்திசையு மார்க்கு மிசையு முணர்ந்திலையோ
மைத்தடஞ் சேர்பொய்கை மறுகக் குடைந்தாடிப்
பத்துடைய நெஞ்சாற் பாடலோ ரெம்பாவாய்

மூவாத கோபங்கள் பள்ளியுணர் நன்னிலத்தில்
பாவாய்! கேள் ஞானவர்கள் வாளனைய கண்மாதே
மேவு மனுதி வாரணங்கள் உம்பர்பிரான்
தாவுகண்ணீர் நீத்த பிறப்பறுக்கு மெங்கோனைத்
தேவி மகரக் குழையாளருளாலே
சேவி பிறவிப்பே ரிந்திராதி யருகன்
பாவனையின் பத்திகள்செய் முத்தன்ன வாழியதாம்
தேவன் திறம்பாடி யாடலோ ரெம்பாவாய்

# அரும்பத வுரை

1. மூவா—கெடாத
பாவை—பெண்
பைங்கண்—பசிய கண்
துயிலல்—நித்திரைசெய்தல்
பூ—அழகு
கழல்—கால்
நெஞ்சு—மனம்
அமளி—படுக்கை
ஓவா—ஓழியா
ஓவியம்—பிரதிமை
ஆ ஆ—அதிசயக் குறிப்பு,இரக்கக் குறிப்பு
2. கடிந்து—கோபித்து
எண்குணன்—அருகன்
பணிந்து—தொழுது
சாபம்—வில்
துணை—இணை
தாது—பூந்தாது
பூவணை—பூவாலாகிய படுக்கை
சோபம்—சோம்பல்
துடி—உடுக்கை
இடை—இடுப்பு
தடம்—குளம்
தீபங்குடியமர்ந்த செல்வன்—பார்ஸ்வநாதர்
தாபம்—துன்பம்
3. பள்ளி—நித்திரை
அறவாழி—தரும சக்கரம்
உள்ளம்—ஆன்மரூபஞானம்
உகந்து—மகிழ்ந்து
கடை—வாயில் வழி
கள்—தேன்
பிண்டி—அசோகு
தெள்ளிய—அறிவுடைய
புத்து—புதிது
திறம்—திறமை

ஒள்ளியர்—அறிவுடையவர்; மாசற்றவர்
4. நித்திலம்—முத்து
நகை—பல்
மடவார்—பெண்கள்
அவம்—வீண்
போதம்—ஞானம்
விழுப்பொருள்—மேன்மையான பொருள்
சென்னி—சிரம்
அறம்—தருமம்
வன்னி—தீ
5. வானவர்—தேவர்கள்
அரிய—அருமையான
நான்மறை—நான்கு வேதங்கள்; அவை : பிரதமாநு யோகம், சரணாநு யோகம், திரவ்யாநு யோகம், கரணாநு யோகம் என நான்கு.
மெய்ப்பொருள்—உண்மையான பொருள்
தறுகண்மை—அஞ்சாமை
வான்—ஆகாயம்
செவ்வாய்—சிவந்த வாய்
நிலன்—பூமி
வளி—காற்று
எரி—தீ
புனல்—நீர்
ஊன்—உடல்
உளம்—மனம்
6. மெய்ம்மறத்தல்—தன்னை மறத்தல்
வேள்—மன்மதன்
முனிதல்—கோபித்தல்
விண்ணோர் பெருமான்—அருகன்
கேவலி—கேவலஞான முடையவன்

7. மாது—பெண்
போது—பூ
புனிதன்—பரிசுத்தன்
பல்லியம்—பல்வகை வாத்தியம்
ஓராது—உணராது
மதி—சந்திரன்
முக்குடையான்—மூன்று குடைகளையுடைய அருகன்
சோமம்—ஆகாயம்
ரவி—சூரியன்
காதி வினை—காதி கர்மம்
கற்பகன்—அருகன்
பேதையர்—அறிவீனர்
பிரமித்து—திகைத்து
அனாதி—ஆதி யின்மை
8. கமம்—ஆகமநூல்
முனி இந்திரன்—முனீந்திரன்
ஆகம்—உடல்
அகம்—பாவம்
9. வாரணம்—கோழி
இசை—சங்கீதம்
பேரிகை—முரசு
தூரியம்—உவகைப் பறை, முரசு
முழங்க—ஒலிக்க
தார்—பூ
காரிகை—பெண்
பாசம்—அன்பு
மாரன்—மன்மதன்
காலன்—இயமன்
ஈரேழு—பதினான்கு
புவி—உலகம்
இறை—கடவுள்
10. உம்பர்—தேவர்
செம்பொன்—செம்மையான பொன்
எயில்—மதில்
வெம்பு—கொடிய
சம்பு—அருகன்
விம்பம்—ஒளி
தயந்த—விரும்பிய
தமர்—சுற்றம்
11. தண்—குளிர்ச்சி
பொய்கை—குளம்
வண்ணம்—அழகு
மண்ணுலகு—பூமி
நாரணன்—விஷ்ணு
இயல்—ஆகமம்
12. பொழில்—சோலை
கச்சி—காஞ்சிபுரம்
புங்கவன்—கடவுள்
ஏத்தும்—துதிக்கும்
குவலயம்—பூமி
எண்டிசை—எட்டுத்திக்கு
அண்டர்கள்—வானோர்கள்
உய்யுமாறு—பிழைக்கும்படி
அளித்து—காத்து
நா—நாக்கு
தழும்பு—காயம்
அலம்ப—ஒலிக்க
மணி—இரத்தினம்
குழல்—பெண்மயிர்
மணம்—வாசனை
13. அசலன்—கடவுள்
அமலன்—அருகன்
சேமம்—இன்பம்
வங்காரம்—பொன்
வரதன்—அருகன்
திருந்தடி—அழகிய பாதம்
பெங்கார்வம்—மிகுந்த அன்பு
கேவலம்—மோக்ஷம், வீடு
பங்கேருகம்—தாமரை
14. மகரக்குழை—மகரகுண்டலம், காதணியி னொன்று
சிகரம்—தலை
செறி—நெருங்கிய
முகரம்—சங்கு
இகல்—பகை
15. குழைந்து—இளகி
மருள்—மயக்கம்

**16.** வளை—வளையல்
முச்சந்த வாழ்மலை—திருமலை
அம்மை—தரும தேவி
நறை—தேன்
நல்கி—விரும்பி
கறவை—பாற்பசு
திரள்—கூட்டம்
கார்வண்ணன்—விஷ்ணு
நேமி—நேமி தீர்த்தங்கரர்
**17** இருடி—முனிவன்
தவர்—முனிவர்
விந்தை—வீர இலக்குமி
சுந்தரம்—அழகு
நைந்து—நொந்து
**18.** எரி—பிரகாசம்
மௌலி—கிரீடம்
தொன்மை—பழமை
தூற்றின போல்—சிதறின போல்
ஓதம்—கடல்
எழும்—உதிக்கின்ற
கதிரோன்—சூரியன்
சீதம்—குளிர்ச்சி
அலி—பேடி
மேதினி—பூமி
நீர்—சலம்
வியன்—ஆகாயம்
எரி—அக்கினி
வளி—காற்று
**19.** சித்தம்—மனம்
கொத்து—திரள்
**20.** துளைந்து—கலந்து
புண்டரீகம்—வெண்டாமரை